உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.


| மலர் 5 | காலயுத்திஞு பங்குனிமீ -1919ஞு மார்ச்மீ<br>சித்தாத்திரிஞு சித்திரைமீ ,, ஏப்ரல்மீ | இதழ் 3-4 |
|---|---|---|


## சுந்தரமூர்த்தி நாயனார் துதி,

(பெரியபுராணம்.)

---

மலர்மிசை யயனுமாலுங் காணுதற் கரியவள்ளல்
பலர்புகழ் வெண்ணைநல்லூ ராவணப் பழமைகாட்டி
உலகுய்ய வாண்டுகொள்ளப் பெற்றவர் பாதமுன்னித்
தலைமிசை வைத்துவாழுந் தலைமைநந் தலைமையாகும்.

(இ-ள்.) மலர்மிசையயனுமாலும் = தாமரை மலரின்கண் வாழும் பிரமனுந்திருமாலும்; காணுதற்கரியவள்ளல் = அடியையும் முடியையும் தேடி அறிதற்கரிய சிவபிரான்; பலர்புகழ் வெண்ணைநல்லூர் = யாவரும் புகழத்தக்க திருவெண்ணை நல்லூரின்கண்; ஆவணப்பழமைகாட்டி = கிழித்த ஆவணத்துப்பழமையான மூல ஓலையைக்காட்டி; உலகுய்யவாண்டுகொள்ளப் பெற்றவர் = உலகத்தார் ஈடேறும்படி தடுத்தாட்கொள்ளப் பெற்ற நம்பியாரூரரது; பாதமுன்னித் தலைமிசைவைத்து வாழும் = திருவடிகளைத் தியானித்து அத்திருவடிகளை எந்நாளும் சிரசின்மேல் சூடிக்கொண்டு வாழும்; தலைமைநந்தலைமையாகும் = மேன்மையே நமக்கு உயர்ந்த சிறப்பாகும். —எ-று.

## சிவஞானபோதம்.

(32-வது பக்கத்தொடர்ச்சி.)

### ஏழாஞ் சூத்திரம்.—மூன்றும் அதிகரணம்.

இருதிறனறிவுள திரண்டலாவான்மா.

(இ-ள்.) சத்தும் அசத்துமாகிய இவ்விரண்டினையும் அறியுந் தன்மைத்தாய், உபதேசியாய் (அதாவது அறிவிக்க அறிவதாய்,) நிலை பெற்ற சத்தும் அசத்தும் ஆகிய இரண்டினிடத்தும் அநுபவ அறிவுளதாய் உள்ள அதுவே சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய ஆன்மா (எ-று.)

இருதிறனறிவு என்னுஞ் சொற்றொடர் இரண்டாம் வேற்றுமைத் தொகையாக இருதிறனையும் (அதாவது சத்தையும் அசத்தையும்) அறியும் அறிவு எனவும், மூன்றும் வேற்றுமைத் தொகையாக இருதிறனால் விளங்கிய அறிவு எனவும், ஏழாம் வேற்றுமைத் தொகையாக இருதிறனினுமுள்ள அறிவு எனவும் மூன்று பொருளைக் கொடுக்கின்றது. இம்மூன்று பொருள்களும் பின்வரும் மூன்று உதாரண வெண்பாக்களால் விளக்கப்பட்டிருக்கின்றன.

இதில் 1-வது—தன்னாற் கூறப்படும்பொருள்—உயிர் அரனை அடையும், அனுபவிக்கும்.

2-வது—ஐயப்பாடு—சத்து அசத்தையும் அசத்துச்சத்தையும் அறியாதாயின் இவ்விரண்டினையும் அறியும்பொருள் இவ்விரண்டின் வேறாய் உண்டோ, இல்லையோ.

3-வது—பிறர் கூறும்பக்கம்—சத்து அசத்தையும் அசத்துச் சத்தையும் அறியாதாயின் இவ்விரண்டினையும் அறியும்பொருள் வேறில்லை. இவ்வாறு கூறுவோர் சிவாத்துவித சைவர் சிவசங்கிராந்த சைவர் முதலாயினோர்.

4-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபு.—சத்தும் அசத்துமாகிய இவ்விரண்டினையும் அறியும்பொருள் வேறில்லையாயின் இவற்றால் யாதொரு பயனுமின்றாய் இவை சூனியமாய் முடியும். ஆதலால் இவ்விரண்டையும் அறியும்பொருள் (பாரிசேட அளவையால்) இவற்றின் வேறாய் ஒன்று உண்டு என்பதும், அதுவே சதசத்தாகிய ஆன்மா என்பதும் பெறப்படும்.



இருதிறனறிவு என்னுஞ் சொற்றொடர்க்கு இரண்டாம் வேற்றுமைத் தொகைப் பொருள்கொண்டு முற்கூறிய சிவாத்துவித சைவர் சிவசங்கிராந்தவாத சைவர் முதலியோரும், மூன்றும் வேற்றுமைத் தொகைப்பொருள் கொண்டு ஆன்மா ஒருவர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் இயல்புடையது என்னும் சமவாத சைவர் ஈசுரவவிகாரவாத சைவர் ஐக்கவாத சைவர் முதலியோரும், ஏழாம் வேற்றுமைத் தொகைப்பொருள்கொண்டு ஆன்மாவினறிவு சத்தோடு கூடுவதில்லை என்னும் பாடாண வாதசைவர் பேதவாத சைவர் முதலியோரும், ஆன்மவறிவு சத்தினோடு கூடியபோது ஒன்றாய்ப் போதலேயன்றி அதனிடத்தில் உள்ளதாகாது என்னுஞ் சுத்தசைவர் முதலியோரும் மறுக்கப்பட்டனர்.

இருதிறனறிவு என்பதற்கு, இருதிறனையும் அறியும் அறிவு என்று பொருள்கூறுங்கால், ஆன்மாவினறிவு சத்துப்போல் ஒருசேர அறியுந்தன்மையும் அசத்துப்போல் அறியாத தன்மையும் இன்றி, இருளின் தன்மையும் ஒளியின் தன்மையுமல்லாத கண்ணின் தன்மைபோல், ஏகதேசமாய் அறியும் வேறாய தன்மையது என்பது பெறப்படும். இருதிறனால் விளங்கிய அறிவு என்று பொருள் கூறுங்கால், அந்த ஏகதேச அறிவும் ஆகாயத்தின் குணமாகிய ஓசையானது துணையுள்ளவிடத்து விளங்குவதுபோல, பெத்தத்தில் கருவியையும் முத்தியில் திருவருளையும் துணையாகக்கொண்டு விளங்குந் தன்மையது என்பது பெறப்படும். இருதிறனினுமுள்ள அறிவு என ஏழாம்வேற்றுமைத் தொகைப்பொருள் கூறுங்கால் துணையைக்கொண்டு விளங்கும் ஏகதேச அறிவும் சார்ந்த பொருளின் வண்ணமாய் விளங்கும் படிகம்போல் அசத்தோடுசார்ந்தவிடத்து அசத்தாயும் சத்தோடு சார்ந்தவிடத்துச் சத்தாயும், இவ்வாறு சார்ந்ததன் வண்ணமாய் அழுந்துந் தன்மையது என்பது பெறப்படும். இதனால் ஆன்மாவின் சிறப்பிலக்கணம் கூறியவாறுமாம்.

5-வது—இயைபு.

### உதாரண வெண்பா.

அருவுருவுந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்றாகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றேக்கு.

(இ-ள்.) ஆய் இழை ஆய் ஆன்மா=நுணுகிய நூற்பொருள்களை ஆராய்வதாகிய உயிரே—அரு உருவம் அறிதல்=சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவதாகலான்—அரு உருவம் அன்றாகும்=அஃது அவ்விரண்டுமன்றி அவற்றின் வேறாம்—(அவ்வாறாயின் அவ்விரண்டினையும் அறியும் உயிர்க்குத் தன் உண்மை அறியப்படுமோ, படாதோ என்று கேட்போர்க்கு அறியப்படும் எனில், தன்னோடுகூட மூன்றினையும் ஆன்மா அறிவது என்று கூறாமல் இரண்டினையும் அறிவது என்றல் பொருந்தாது. அறியப்படாது எனின் அறியப்படாதபொருள் சூனியம் எனப்பட்டுக் குற்றமாம். ஆதலால்)—உண்மை=அவ்வான்மாவின் உண்மைத் தன்மையானது—அருவுருவாய்த்தோன்றி உடன் நில்லாது=சத்தும் அசத்துமாகிய அவ்விரண்டும்போல விளங்கித்தோன்றி அவற்றோடு ஒப்ப நிற்பதும் அன்றாய்—தோன்றாது நில்லாது=விளங்காது சூனியமாய் நிற்பதுமன்றாய்—மலர் மணம்போல்தொக்குத் தோன்றல்=மலரின்கண் வாசம்போல் அடங்கித் தோன்றுவதோரியல்பாம்.(அஃதாவது மலரின்கணுள்ள வாசமானது அம்மலர்போல விளங்கித் தோன்றாமலும், விளங்காதுசூனியமாகாமலும் அதனின் அடங்கித் தோன்றுவதுபோல், சத்து அசத்தாகிய அவ்விரண்டும்போல் விளங்கித் தோன்றி அவ்விரண்டினோடு சமமாய் நிற்பதாகாமலும், விளங்காது சூனியமாய் நிற்பதாகாமலும், சத்தைச் சார்ந்தபொழுது சத்தாகவும் அசத்தைச்சார்ந்தபொழுது அசத்தாகவும், இவ்வாறு சார்ந்தபொருளின் வண்ணமாய் அடங்கித்தோன்றுவதோ ரியல்பாம்.) ஆதலால் அவ்வுயிர் அவ்விரண்டும் போல் தனித்தறியப் படுவதன்றி அவ்விரண்டினையும் அறியும் வழியால் அறியப்படுவதாம் (எ-று.)

இவ்வெண்பாவினால் "இருதிறனறிவு என்பதற்குக் கூறிய மூன்று பொருள்களுள், ஆன்மா இரண்டினையும் அறியும் என்றதனை வலியுறுத்தி, அது அவ்விரண்டல்லாமை விளக்கப்பட்டது.

சுட்டியுணரப்படாமையால் சத்தை அருவென்றும், சுட்டப்படுதல்பற்றி அசத்தை உரு என்றுங் கூறினர். இழை யென்பது நூல். அது இவ்விடத்தில் சாத்திரத்தை யுணர்த்துகின்றது. ஆன்மாக்களுக்கு அறியும் தன்மை இருப்பதுபற்றியன்றோ வேதாகமம் முதலிய நூல்கள் உண்டாயின என அதனை வலியுறுத்தவேண்டி "ஆயிழையாயான்மா" என்றனர்.



## உதாரண வெண்பா.

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர் நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

(இ-ள்.) மயக்கமது உற்றும்=(நின் அறிவை விளக்குதற்குரிய வியஞ்சகம் இல்லாதபோது ஒரு விடயத்தை இன்னதென அறியமாட்டாது) மயக்கத்தை யடைந்தும்—மருந்தின் தெளிந்தும்=(பசிநோய்க்கு அன்னம்போல அம்மயக்க நோய்க்கு) மருந்தாய வியஞ்சகம் உள்ளபோது அம்மயக்கம் நீங்கி அதனையின்னதென நிச்சயித்தும்=பெயர்த்து உணர் நீ=இங்ஙனம் மாறிமாறியுணர்ந்து வருகின்ற நீ—பேசில் சத்து ஆகாய்=சொல்லுமிடத்துச் சிவசத்தோடு ஒப்ப அறியுஞ் சத்தியுடையாய் அல்லை—அவ்வாறாயின் யான் அசத்தனோ என்பையேல்—நீ அறிந்து செய்வினைகள்=(வியஞ்சகம் உள்ளபோதும்) நீ முன் அறிந்துசெய்த வினைகளை—நீ அன்றி அசத்து தான் அறிந்து துய்யாமை=இப்பொழுது நீயே அறிந்து அநுபவிக்க வல்லாயன்றி, நின்னின் வேறாயதும் அசத்தாகியதுமாகிய பாசம் அறிந்து அநுபவிக்க மாட்டாமையால்—அசத்தும் அலை=அதனோடொப்ப அசத்தனு வாயுமல்லை—வேறு=(ஓசையாகிய குணத்தையுடைய ஆகாயம்போல், அஃதாவது ஆகாயத்திலுள்ள குணமாகிய ஓசை துணையுள்ள விடத்து விளங்கித் துணையில்லாதவிடத்து விளங்காதவாறுபோல, வியஞ்சகம் உள்ளபோது அறிதலும் அது இல்லாதபோது அறியாமையும் ஆகிய இரண்டும் உடைய நீ) அவ்விரண்டிற்கும் வேறாய்ச் சிதசித்தாம் தன்மையுடையாய். (எ-று.)

இதனால் இருதிறனறிவு "என்னுஞ்சொற்றொடர்க்குமுற்கூறிய மூன்று பொருள்களுள், ஆன்மா அறிவிக்க அறிவதாகிய உபதேசியாய்நிற்பதென்பதை வலியுறுத்தி அது சத்தும் அசத்துமாகிய இரண்டுமல்லாத சதசத்து என்பது விளக்கப்பட்டது.

மயக்கமது என்பதில் உள்ள அது என்பது பகுதிப்பொருள் விகுதி. ஈற்றிலுள்ளதான் என்பது அசை—துவ்வாமை என்பது துய்யாமை என மருவியது. சத்தியுடைய பொருள்சத்தம். அஃதில்லாப்பொருள் அசத்தம். சத்தம் அசத்தம் என்பன அம் ஈறுகெட்டுத்து அசத்து என நின்றன. ஆதலால் சத்து ஆகாய் என்பதற்குச் சத்தியுடையாய் அல்லை என்று பொருளுரைக்கப்பட்டது.

## உதாரண வெண்பா.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞானமுள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளமுளவாத் தான்.

அன்வயம்—அஞ்ஞானம் மெய்ஞ்ஞானந்தன்னில் அசத்தாதல் விளையாது. மெய்ஞ்ஞானந்தானே உள அன்றே தான் ஏய் உளம் உளவா, உள்ளம் அணைதல் தண்கடல்நீர் உப்புப்போல் காண்.

(இ-ள்.) அஞ்ஞானம்=மேற்கூறிய மயக்கமாவது—மெய்ஞ்ஞானந்தன்னில்=ஒருபெற்றித்தாய அறிவு எனப்படும் சிவத்தின் முன் (அஃதாவது வேறுவேறுகவும் விட்டுவிட்டும் அறியாது எவற்றையும் ஒருதன்மையாகவும் நீங்காமலும் அறிகின்ற அறிவுருவாகிய இறைவன் சந்நிதியில்)—அசத்து ஆதல்=(சூரியன் முன் இருள்போல) நிற்பதில்லை யாகலான்—விளையாது=ஆண்டு உளதாதலின்றி (அதாவது அவ்விறைவனிடத்து உளதாகாமல்)—மெய்ஞ்ஞானம் தானே உள அன்றே=அச்சிவம் உள்ள அன்றே (அஃதாவது என்று சிவம் உண்டோ அன்றே)—தான் ஏய் உளம் உளவா=தான் பொருந்துதற்கு உரிமையுடைய உயிர்கள் உள்ளனவாக—உள்ளம் மணைதல்=அவ்வுயிர்களைப்பற்றிநிற்றல்—தண்கடல் நீர் உப்புப்போல் காண்=தண்ணிய கடலின் கண் உளதாதலின்றி அக்கடலிடத்துள்ளதாகிய நீரைப்பற்றி நிற்கும் உப்புப்போல் என் றறிவாயாக. எ-று.

இதனால் இருதிறனறிவு என்பதற்குக் கூறிய பொருள்கள் மூன்றனுள் இருதிறனிலுமுள்ள அறிவு என்றதனை வலியுறுத்த வேண்டி உயிருக்கு உண்டென்று கூறிய மயக்கம் அவ்வுயிரோடு சம்பந்தமுடைய முதல்வனுக்கு உண்டாகாதோ எனவும், அம்மயக்கந்தான் உயிர்க்கு எக்காலத்துவந்தது எனவும் ஆசங்கை நிகழாவண்ணம் இறைவனுக்குமயக்கமில்லை என்பதும் இறைவன் என்று உண்டோ அன்றே உயிர்களும் உளவாயிருத்தலால் அம்மயக்கம் உயிருக்கு அனுதியாகவே உள்ளதென்பதும் விளக்கப்பட்டன.

"தண்கடல்நீர்உப்பு" என்பதில் கடல் என்பது நீர்தங்குமிடமாகிய வெளியாம். கடல்சிவத்திற்கும், நீர்உயிருக்கும் உப்புபாசத்திற்கும் உபமானங்களாம். கடல் (பூரண) வியாபகமும், நீர் (ஏகதேச வியாபகம் என்னும்)வியாப்பியமும், உப்பு(நீரளவில்வியாபகமான) வியாத்தியுமாம். இவ்வுதாரணத்தால், உப்பானது நீர்க்கு இடம்



கொடுத்திருக்கும் ஆகாயத்தைப்பற்றுது நீரைப்பற்றி நிற்பதுபோல் அஞ்ஞானமாகிய மயக்கம் இறைவனைப்பற்றுது உயிரை அனுதியே பற்றி நிற்கும் என்பதும், முப்பொருள்களும் வியாபகவியாப்பியங்களாய் நிற்குமாறும், உயிர் சத்து அசத்து ஆகிய இரண்டன்பாலும் அநுபவ அறிவு உள்ளது என்பதும் விளக்கப்பட்டன.

இச்செய்யுளின் ஈற்றினுள்ள தான் என்பது அசை.

இருதிறனறிவுளது என்பதற்கு இருதிறனையும் அறியும் அறிவு உளது என்று பொருள்கூறுங்கால் இருதிறனுகிய சத்து அசத்து என்பன பிரமேயமும், அவற்றை யறியுஞ் சதசத்தாகிய உயிர் பிரமாதாவும், அவ்வுயிரின் அறிவாகிய சிற்சத்தி பிரமாணமும், அவ்வறிவு நிழ்ச்சி பிரமிதியுமாமென்பது பெறப்படும். (பிரமேயம்=அளக்கப்படும்பொருள். பிரமாதா—அளப்பவன். பிரமாணம்—அளவைக்கருவி. பிரமிதி—அளத்தல்.) இருதிறனல் விளங்கும் அறிவுளது என்றுபொருள் உரைக்குங்கால், அசத்தால் அறிவுவிளங்கும் போது தனக்கு வேருய் நின்று விளக்குவனவாகிய காட்சி அனுமானம் உரை எனப்படும் அசத்தாகிய பாசஞானம் மூன்றும் தனக்கு வியஞ்சகங்களும், சத்தால் (அதாவது சிவத்தால்) அறிவு விளங்கும் போது அன்னியமின்றித்தனக்குஆதாரமாய் உடனின்றுவிளக்கும் சிவஞானம் தனக்கு வியஞ்சகமுமாம் ஆதலால் அவையும் பிரமாணம் என்று உபசரித்துக்கூறப்படும் என்பதும்,இருதிறனிலும் அறிவுளது என்று பொருளுரைக்குங்கால் இரண்டிடத்தும் கேடின்றி, அசத்தான் அறிவு விளங்கி அசத்தை அறிந்தவிடத்து அசத்தினிடத்தும், சத்தால் அறிவு விளங்கிச் சத்தையறிந்தவிடத்துச்சத்தினிடத்தும் அதுவதுவாய் அழுந்திநிற்பது என்பதும் பெறப்படும்.

இச்சூத்திரத்தின் தொகைப்பொருள்,— வாக்குமனுதீதமாய்ச் சுட்டுணர்வின்றி நின்றறியுஞ் சிவசத்தின்முன் சுட்டியுணரப்படுவதாகிய பிரபஞ்சம் விளங்கித்தோன்றுதென்பதும், அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலினுல் அது சத்தாகிய சிவத்தை யறியாதென்பதும், இவை யொன்றையொன்று அறியாதெனவிலக்கவே பாரிசேட அளவையின்படி இவற்றையறியும் பொருள் வேறென்றிருத்தல்வேண்டும் என்பதும், அதுவே சத்தும் அசத்தும் ஆகாமல் சத்தையறியும்போது சத்தாகவும் அசத்தையறியும் போது அசத்தாகவும் நிற்கும் இயல்புடைய சதசத்தாகிய உயிர் என்பதுமாம்.

# அர்ச்சாதீபம்.

(5-வது மலர் 40-வது பக்கத்தொடர்ச்சி.)

பிருஹஜ்ஜாபாலத்தில். "திக்பஸ்ம ரஹிதம்பாலம், திக்கிராம மசிவாலயம், திகநீசார்ச்சனம் ஜன்ம, திக்வித்யாமசிவாத்மிகாம்!" என்னும் வசனத்தால் பஸ்மமில்லாத நெற்றியைச்சுடு. சிவாலய மில்லாத கிராமத்தைக் கொளுத்து. சிவபூசையில்லாத ஜந்மத்தைச் சுடு. சிவஸ்வரூபமில்லாத வித்தையைச்சுடு என்று பெறப்படுகின்றது. இந்த வுபநிஷத்தினது அர்த்த வைபவமாகத், "திருக் கோயிலில்லாத திருவிலூருந்-திருவெண்ணீறணியாத திருவிலூரும், பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும் - பாங்கினொடு பலதளிக ளில்லாவூரும், விருப்போடு வெண்சங்க மூதாவூரும் - விதானமும் வெண்கொடியு மில்லாவூரும், அருப்போடு மலர்பறித்திட் டுண்ணு வூரும் - அவையெல்லா மூரல்ல வடிவிகாடே" என்று சைவத் தலைவருங் கூறியிருக்கின்றனர். சிவபூசை யில்லாத ஜந்மத்தையும், சிவாலயமில்லாத கிராமத்தையுஞ்சுட வேதம் விதிக்குமானால், அவற்றை நிந்திக்கின்றபேர் அடையுங்கதியை யாம் சொல்லவும் வேண்டுமோ? எமக்கும் வேதம்பிரமாணம் என்று அநுசரித்து வருவோர் அதற்கு அஞ்சி வாழவேண்டியது.

ருக்ஸம்ஹிதையில் "தமுஷ்டு ஹியஸ்விகஸ்ஸூ சந்யாயோ விஸ்வஸ்ய க்ஷயதிபேஷ ஜஸ்யயக்ஷ்யா மஹேஸேனமனஸாயருத்ரம் நமோ பிர்தேவ் மஸூரம்துவஸ்வ" என்னும் மந்திரத்தால் அந்த வுருத்திரமூர்த்தியை ஸ்தோத்திரஞ்செய்க வெனவும், யாவன் விஷ்ணுவாகிய பாணத்தைத் தரித்தவனோ? யாவன் மேருவாகிய கோதண்டத்தை ஏந்தினவனோ? யாவன் ஸகல பிரபஞ்சத்தினுடைய ஜீவநௌஷ்தமாக ஆசரிக்கத்தக்கவனோ? அந்தவுருத்திர பகவானைக்குறித்து உத்ஸவகாலத்தில் திரவியத் தியாகஞ் செய்க வெனவும், பிராணதாதாவாகிய அவ்வமலநாயகன் பொருட்டு ஸாரூப்யாதிமோக்ஷஸித்யர்த்தமாக நமஸ்காரங்களால் வழிபடுசவெனவும் விதிக்கப்பட்டிருக்கின்றது. இதில், பரனது கையில் பாணமும், வில்லும், அவனது ஸ்தோத்திரமும், உத்ஸவமும், நமஸ்காராதிபூசைகளுங் கேட்கப்படுகின்றன. இதனால், அப்பெரியோனுக்கு மங்கலவடிவமும் அவனது அர்ச்சனையாதி விபவமும் ஸித்திக்கின்றன. இத்தகையவுண்மைகளை நம்மனோர் இதுகாறுங்கேட்டறிந்திலர். என்செய்வார்பாவம்.!



எஜுஸ்ஸாகையில், "நிதனபதயேநமஃ நிதனபதாந்திகாயநமஃ, ஊர்த்வாயநமஃ ஊர்த்வலிங்காயநமஃ, ஹிரண்யாயநமஃ ஹிரண்யலிங்காயநமஃ, சுவர்ணாயநமஃ சுவர்ணலிங்காயநமஃ, திவ்யாயநமஃ திவ்யலிங்காயநமஃ, பவாயநம பவலிங்காயநமஃ, சர்வாயநமஃ சர்வலிங்காயநமஃ, சிவாயநமஃ சிவலிங்காயநமஃ, ஜ்வலாயநம: ஜ்வலலிங்காயநமஃ ஆத்மாயநம: ஆத்மலிங்காயநம:, பரமாயநம: பரமலிங்காயநம:, ஏதத் ஸோமஸ்ய ஸூர்யஸ்ய ஸர்வலிங்கம் ஸ்தாபயதி பாணி மந்த்ரம் பவித்ரம்." என்னும் வசனங்களைப் பரியாலோசிக்கையில், சிவலிங்கார்தனமானது பரபிரஹ்மத்தினது ஸ்வரூபவிஷயமெனவும், அது சுருதிசிஷ்டமான நமஸ்கார பூர்வகமானதெனவும் வெளியாகின்றது. பவித்திரமாகிய பாணிமந்திரத்தால் ஸ்தாபிக்கத்தக்கதெனவும், அது சிறத்தலால், பூர்வபட்சிகள் சிவலிங்கோபாஸனை வேதத்திற் கேட்கப்படவில்லை யென்று செய்யும் பிரஸ்தாபம் வெறுங்கோஷமாயிற்று.

ஜாபாலசுருதியில் "ருத்ரபுக்தம் பும்ஜீத ருத்ரபீதம் பிபேத், ருத்ராக்ராதம் ஜிக்ரேத், ருத்ரேணுத்தமஸ்நம்தி, ருத்ரேண பீதம் பிபம்தி, ருத்தாக்ராதம் ஜிக்ரம்தி, தஸமாத்ப்ராஹ்மணா: ப்ரசாந்த மனஸோ நிர்மால்யமேவ பக்ஷயம்தி" என்னும் வசனத்தால் ருத்ரபுக்தமாகிய பிரஸாதத்தையே புஜிக்கவேண்டுமெனவும், ருத்ர பீதமாகிய ஜலக்ஷீராதிகளையே பானம் பண்ணவேண்டுமெனவும், ருத்ராக்ராதமாகிய கந்தபுஷ்பாதிகளையே ஆக்ராணிக்க வேண்டுமெனவும் பெறப்படுகின்றது. இது லிங்கார்ச்சனமேயன்றி வேறில்லை. சிவார்ப்பிதமாகாத வொன்றினையுங் கிரகிக்கக்கூடாது என்று இதனாற் றுணியப்படுதலால், நம்மவர் பேசிவரும் வீண்விபரீதம் தலைகாட்டாதொழிந்தது. இதனை வற்புறுத்திக்கூறும் வேறு சுருதியையுங் காட்டுகின்றோம்.

ருக்ஸம்ஹிதையில், "அம்தரிக்ஷம்திதம்ஜநேருத்ரம் பரோமநீஷயாச்ரம்தி ஜீஹ்வா யாக்ருஹ்ணம்திரஸம்" என்னும் வாக்கியத்தில் ஜனங்களிடத்து அந்தரியாமியாகநிற்கும் பரனாகிய அந்தவுருத்திரனைப் புத்தியினால் உள்ளே பற்றுபவர்கள் ஸஸ்யத்தை நாவினால் கிரகிப்பார்கள் என்று கூறப்படுகின்றது. இதனால் அந்தவுருத்திரனை உள்ளே பற்றுதவர்கள் மலத்தையே நாவினாற்கிரகிப்பார்கள் என்று அப்பிரஸ்துதபிரஸம்ஸாலங்காரத்தாற் பெறப்படுகின்றது. இதனால் உருத்திரமூர்த்தியை அர்ச்சிக்கின்றவர்களே உருத்திர நிவேதித

மாகிய அன்னத்தை யுண்பவர்களெனவும், உருத்திரமூர்த்தியை அர்ச்சியாதவர்கள் பகவதர்ப்பிதமாகாத அன்னத்தையுண்ணுகையால், மலத்தையே நாவினால் கிரகிப்பவர்களெனவும் நிச்சயிக்கப்படுகின்றது. இதற்கு உபப்பிரஹ்மணமாக "அந்தர்ணேச்சம் தியேருத்ரம் பவாநீஸ ஹிதம்சிவம், புரீஷமேவக் ருஹ்ணாம்தி ஜிஹ்வாயாதேந ஸம்சய:" என்று பாராசரஸ்மிருதியிற் போந்தமையுங் கண்டுதெளிக. இந்தவுண்மையால், சிவபூசையில்லாதவர்கள் மலபோஜனஞ் செய்பவர்கள் என்றுகொண்ட வேதத்தின் றுணிபு வெளிப்பட்டது. வேதத்தால் தாங்கள் நிந்தித்தொதுக்கப்படுதலறியாது பூர்வபட்சிகள் பிறரைநிந்திப்பது குருட்டரிப்பாளன் குபேரனைப் பழிப்பதுபோலாம்.

ஈசாவாஸ்யத்தில், "ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிம்ச ஜகத்யாம்ஜகத், தேநத்யக்தேநபும்ஜீதா மாக்ருத: கஸ்ய ஸ்வித்தநம்" என்னும் வாக்கியத்தால் ஈசனது பூசையில் அர்ப்பிக்கப்பட்டு அவருண்டருளிய சேஷத்தையே துய்க்கவேண்டியது என்று வெளியாகின்றது. இந்த மந்திரம் நமது பூர்வபட்சிகள் பிரமாணமாகத் தேடிய பகுதியிலடங்கினதேயன்றி வேறில்லை. அவர்கள் அதனை முற்றும்பார்த்திருந்தால் வீண்விவகாரத்தில் தலையிட்டுக்கொள்ளார்கள். அஃதின்மையே அவர்க்கு வீண்பிரவர்த்தகம் உசிதமாயிற்று.

(இன்னும் வரும்.)

---

## ஸ்ரீ ஹரதத்தாசாரிய சுவாமிகள் சரித்திரம்.

---

இஃது

ஸ்ரீமத். ம. தி. பாநுகவி சுவாமிகளால்

எழுதப்பட்டது.

(48-வது பக்கத்தொடர்ச்சி.)

இவற்றைக்கேட்ட திருமால், சுவாமி, நால்வகை ஆச்சிரமங்களினும் உமது பக்தர்கள் உளர் என்று திருவாய்மலர்ந்தருளினீரன்றே, அவர்கள் இலக்ஷணம் என்னை? பெருமை என்னை? அவை இவை என்று எனது பக்தர்கள் அறிந்து கோடற்பொருட்டு எனது



பரமநாதரும், பரமாசாரியருமாகிய நீவிரே சொல்லியருளல்வேண்டுமென்று வேண்டினார். அப்போது சிவபிரான் நான்கு ஆச்சிரமத்துக்குந் தனித்தனி இலக்ஷணம் வெவ்வேறும். இந்நான்கு ஆச்சிரமத்துக்கும் தனித்தனி பிரவர்த்தகர்கள் ததீசி, கௌதமர், அகஸ்தியர், துருவாசர் என்னும் நான்கு இருடிகளேயாவர். பிரமசரியத்தை நிறுத்தினார் ததீசி முனிவர். கிருகஸ்தாச்சிரமத்தை நிறுத்தினார் கௌதமமுனிவர். வானப்பிரஸ்தாச்சிரமத்தை நிறுத்தினார் அகஸ்திய முனிவர். சந்நியாச ஆச்சிரமத்தை நிறுத்தினார் துர்வாசமுனிவர். மலமாயை கன்மம் என்னும் முப்பாசத்தை நீக்குவதும், சிவசம்பந்தமுள்ளதும், மேலானதுமாகிய தீக்ஷையைத் தவிர மனிதர்களுக்கு எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் உத்கிருஷ்டம் எய்துவதில்லை. எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் சிவதீக்ஷையினாலே தான் பாசவிமோசனம் எய்துவதாகும். எவ்வெவருந் தாந்தாம் விரும்பியபடி அந்தந்த ஆச்சிரமத்தைப் பூர்வோத்தரமாக அநுஷ்டிக்கலாம். அங்ஙனம் அநுஷ்டிக்குமிடத்து தீக்ஷையினாற்றான் மோக்ஷம் எய்தும். ஆச்சிரமங்களினாலும் மற்றைக் கருமங்களினாலும் மோக்ஷம் இன்றாம். திரிகாலமும் ஸ்நானஞ்செய்து, பிக்ஷாகாரஞ்செய்து, கௌபீனந்தரித்து, கிருஷ்ணாஜினந் தண்டம் என்பவற்றைத் தாங்கி, சிவாக்கினி பூசைசெய்து, வேதாத்தியயனம்பண்ணி, குடுமியோடு இருப்பவன் பிரமசாரி எனப்படுவான். பருவகாலத்திலே மனைவியைப் புலந்து, ஒழிந்தகாலங்களிலே கலந்து, தெய்வம், விருந்து யாசகர் என்போரை உபசரித்து எவர்க்கும் கருணைபாலிப்பவன் கிருகஸ்தன் எனப்படுவான். சடாதாரியாய் வனவாசஞ்செய்து, பாரியோடுகூடி அத்தியயனஞ்செய்து, பலமூல ஆகாரம்பண்ணி திரிகாலமும் ஸ்நானஞ்செய்து வற்கலை உடுத்து உறைபவன் வானப்பிரஸ்தன் எனப்படுவான். திரிகாலமும் ஸ்நானஞ்செய்து கௌபீனதாரியாய், நிஷ்கள சிவத்தியானஞ்செய்து, தண்டம் பஸ்மம் சடை என்பவைகளையுடையனாய், அக்கினியையும் பாரியையும் விடுத்து, பிக்ஷாகாரஞ்செய்து, கோத்திரம் சந்தானம் என்பவற்றை விடுத்து, அவ்வாறே சர்வகர்மங்களையும்விடுத்து, அபோச்சிய அன்னம் தவிர்த்து, சிவயோகஞ்செய்து, தேகாவசானத்திலே சிவசாயுச்சியம் அடைபவன் சந்நியாசியாவான். நான்கு ஆச்சிரமத்துள்ளாரும் சாபாநுக்கிரகிகளாயே யிருப்பார்கள். ஓ கேசவ, அதிகஞ் சொல்லியாவதென்! சமுசாரசாகரத்தைக் கடத்தற்கு வாய்ந்த ஓர் புணையைச் சொல்கின்றேன்கேள், பைத்தியத்திலேனும், மோகத்

திலேனும், நித்திரையிலேனும் எத்துஷ்டனாயினும், "சிவ" என்னும் இரண்டெழுத்தைச் சிந்தை செய்வானாயின், அவனை எம்மைப் போலக் குருவாக அறிகுதி, அதனால் நாம் அதிக மகிழ்வை அடைவேம்; இதினும் மேலாயது என்! பைத்தியத்தினாலேனும் ஒருவன் பிரணவத்தோடிசைந்த ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஒருமுறை உச்சரிப்பானாயின், அவன் எந்நிலையிலிருந்தாலும் எக்காலமும் பூசிக்கற்பாலனே யாவான். உருத்திர, சம்பு, மகாதேவ, சர்வஞ்ஞ, சங்கர, ஸ்ரீவாமதேவ, ஸ்ரீகண்ட, ஸ்ரீநீலகண்ட என்னும் நாமங்களைச் சொல்லி நம்மைத் தியானிக்கின்றவனை எமது ஆஞ்ஞையினால் யான் என்று மதிக்குதி. பிருகு என்பார் எமது பக்தருள்ளே சிரேஷ்டர். அவரிட்டசாபத்தைக் கடத்தல் யாவர்க்கும் அரிதாகும். ஆதலினால் உனக்கு அந்த இருபத்தைந்து அவதாரமும் எய்தும். இந்த அவதாரம் லோகோபகாரமாயிருக்கும். கவுதமர், ததீசி, கண்ணுவ சியவனர், பிரமா, நந்தி என்னும் ஷண்முனிவர்களும் ஒவ்வோர் ஏதுவினால் துரோகஞ்செய்த பிராமணர்களை வைதிகநெறி பிறழ்ந்தவர்களாயும், சிவநிந்தாபராயணர்களாயும், நெற்றியிலே யோனி முத்திரையுடையவர்களாயும் போமாறு சபித்தார்கள். கமலக்கண்ண, இப்படிச் சபிக்கப்பட்ட பிராமணருள்ளே காசிபகோத்திரத்திலே எக்காலமும் வேதநிந்தை செய்பவரும், விபூதி ருத்திராக்ஷங்களை நிந்திப்பவரும், நம்மை நிந்திப்பவரும், வைதிகர்களையும் நமது பக்தர்களையும் நிந்தைசெய்பவரும், எப்போதுந் தப்தமுத்திரையுடையவரும், பாஞ்சராத்திரபாராயணருமாகிய வாசுதேவர் என்னும் பெயரோடு இக்கலியுகத்திலே ஒருவர் பிறப்பார். அவர் பாஞ்சராத்திரிகளெல்லோர்க்கும் தேசிகராவர். அவர் உன்னைப் புதல்வனாகப் பெறும்பொருட்டு நெடுங்காலம் தவஞ்செய்யப் போகின்றார். அப்போது நமது ஆஞ்ஞையின்படியே நீ அவருக்குப் புதல்வனாய்ப் பிறக்குதி. மூன்று வயசு தொடுத்து நீ எம்மைச் சிறுபிள்ளை விளையாட்டாய்ப் பூசித்துக்கொண்டு வருங்கால், ஐந்தாம் வயசிலே உனக்கு நாம் சமஸ்தவித்தைகளையும் மனோரத போகங்களையுந் தந்து, இறுதியிலே எமது சாயுச்சிய பதவியையும் அருளுவேம். இருபத்தைந்து அவதாரங்களுள்ளே ஐந்து அவதாரங்களில் உனது கருவத்தை நாசஞ்செய்து, மற்ற இருபது அவதாரங்களினும் நீ நம்மைப் பூசிப்ப, நாம் உனக்கு விரும்பியது கொடுப்பேம்; அதனால் நீ திருப்தி பூணக்கடவை; உன்னுடைய அவதாரங்களைச் சனங்களெல்லாம் வழிபடுவார்கள். அப்படி வழி



படுவோர் உனது பதத்தை அடைவார். இன்னும் ஒரு ரகசியம் சொல்கின்றேம் கேள். அஃதாவது உனது சென்மம் ஒன்றிலே நீ உன்பாரியைப் பிரியப்பெறுவாய் என்றார். நம்மை லிங்கரூபமாக வைத்துப் பூசித்தும், துதித்தும், புகழ்ந்தும் நமஸ்கரித்தும் வருபவர்களுக்குப் போகமோக்ஷங்களைச் சந்தேகமின்றி யருள்வேம். இந்த கஞ்சாபுரத்திலே மூன்று தினம் வாசஞ்செய்து, சிவபக்தர்களாகிய பிராமணர்களைப் பூசை தர்ப்பணங்களால் வழிபட்டு, மகாமந்திர ரகசியமாகிய ஸ்ரீபஞ்சாட்சரத்தைச் செபிக்கின்றவர்கள் கோடி சென்மங்களிலே செய்த பாபங்களும் நாசமாக தேகாந்தத்திலே சாயுச்சியத்தை அடைகின்றார்கள் என்று திருவாய்மலர்ந்தருளினர். விஷ்ணு இவற்றைக்கேட்டு, தேவ தேவரே! மகாதேவரே! சந்திரார்த்த சேகரரே! உமது திருவடியை அடைந்தேன். கஞ்சாபுரத்திலே நான் உம்மைப் பூசை செய்துகொண்டிருக்குங்கால், எனது மனோபீஷ்டமெல்லாம் முற்றுமாறு வரந்தருளல் வேண்டுமென்று வேண்ட, அதற்குச் சிவபெருமான் அங்ஙனமாகுக என்று திருவாய் மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர். ஸ்ரீநாயகராகிய விஷ்ணுவும் தமது தானத்தை அடைந்தார்.

இந்தப் புண்ணிய க்ஷேத்திரமாகிய கஞ்சாபுரத்திலே எழுந்தருளி யிருக்கின்ற அக்கினீசுவரப் பெருமான்மீது அன்புடையராய் வைதிக சைவப்பிராமணர்கள் அவர் கருணைக்குப் பாத்திரராயினர். இவர்களை நினைக்கும் நினைவே மகாபாதகங்களையும் நாசஞ்செய்யும். இவர்கள் சாபாலோபநிஷதங்களை உச்சாரணஞ்செய்து, வைதிக சைவ விபூதிகொண்டு திரிகாலமும் உத்தூளன திரிபுண்டரஞ் செய்பவர்கள், திரிகாலங்களினும் பக்தியோடு சிவார்ச்சனை செய்பவர்கள், சிவ விரதங்களையும் யுக்தவிரதங்களையும் அநுஷ்டிப்பவர்கள், வேதாத்தியயனஞ் செய்பவர்கள், சிரௌதாக்கினிவளர்ப்பவர்கள், ஒவ்வோர்கிருகத்திலும் புரோடாச அவ்யசம்பந்தமாகிய தூமத்தினாலே தூய்மைவாய்ந்தவர்கள்; உருத்திராக்ஷதாரணர்களாயும், ஸ்ரீபஞ்சாக்ஷர செபஞ் செய்பவர்களாயும், சிவபூசாபாராயணர்களாயும், சிவபுராணார்த்தங்களை ஆராய்பவராயும், சிவநாமத்தையே உச்சரிப்பவர்களாயும், சிவபக்தர்கண்மீது எக்காலமும் அன்புடையராயும், சிவதரிசனம் - சிவநமஸ்காரம் - சிவபூசை முதலியவைகளிலே ஓர்காலும் வழுவாதவராயும், சிவபூசாவிஷயம்பற்றிச் சிவாகமங்களை நன்றாக ஆராய்ந்தறிந்தவர்களாயும், பிரதக்ஷிண நமஸ்காரங்களையும் மற்றைய திருத்தொண்டு

களையும் எக்காலமும் செய்பவர்களாயு முள்ளார்கள். அவர்கள் மனைவியரும் அவர்களைப்போற் றிருத்தொண்டுசெய்பவர்கள். தமது நாயகர்களுக்குத் தொண்டுசெய்தும் சிவபூசைசெய்தும், பஞ்சாக்ஷர செபஞ் செய்தும், சிவகைங்கரியங்கள் செய்தும் வருவார். இவர்கள் அருந்ததியினும் சிறந்த கற்பினை யுடையார். அங்கே எக்காலமும் வேதசிரசுகளை நன்கு உணர்ந்து, சிவபூசாபராயணராய், பஸ்ம ருத்ராக்ஷ தாரிகளாயுள்ள பரமஹம்சஸந்நியாஸிகள் அக்கினீசுவரப்பெருமானைத் தலையன்பினாலே எக்காலமும் சேவிக்குமாறு வாசஞ்செய்கின்றார்கள்.

பின்னர் அந்தக் கஞ்சாபுரத்திலே விஷ்ணுவானவர் கற்பங்கடோறும் தமது சாபநிவாரணத்தின்பொருட்டு அக்கினீசுவரப் பெருமானைப் பூசித்துக்கொண்டு வந்தார். இந்தத் தலவிசேஷத்தை நோக்கியே அயன் அரி இந்திரன் அக்கினி என்போர் தத்தம் நாமங்களிலே தனித்தனியே அங்கே தீர்த்தங்கள் அமைத்துச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார்கள். இப்பொழுதும் தேவர்கள் மகாதேவருக்குத் தொண்டுசெய்துகொண்டு வருகின்றார்கள்.

கௌதம முனிவராலும் நந்திகேசுரராலும் சபிக்கப்பட்ட வைஷ்ணவப் பிராமணர்களிற் சிலர் கஞ்சாபுரத்து விஷ்ணுவாலயத்துக்குச் சமீபத்திலே வாசஞ்செய்கின்றார்கள். அவர்கள் வெள்ளைமண் பூசுபவர்கள், வெள்ளைவஸ்திரம் உடுப்பவர், யஞ்ஞோபவீத தாரணர்கள், தப்தமுத்திரை தரிப்பவர்கள், வேதசார விமுகர்கள், பாஞ்சராத்திர பாராயணர்கள், சிவநிந்தை எக்காலமுஞ் செய்பவர்கள், வைதிகப்பிராமணரைத் தூஷிப்பவர்கள், விபூதிருத்திராக்ஷந் தரித்தவர்களைக் குரூரதிருஷ்டிகொண்டு பார்ப்பவர்கள், இவர்களுள்ளே வாசுதேவர் என்பவர் ஒருவர் இருந்தார். இந்தப் பிராமணர் ஓர் புத்திரனை வாஞ்சித்து விஷ்ணுவை நோக்கி மெய்யன்போடு உபாசித்தார். சுப்பிரதீகர் என்பவர் ஒருவர் ஓர் புத்திரியை வாஞ்சித்துத் தவஞ்செய்தார். அப்பொழுது விஷ்ணுவானவர் அவ்விருவர்மீதும் பிரீதிகொண்டு இலக்குமியை யழைத்து, பிராணநாயகியே! நீ பூமியின்கண்ணே சென்று சுப்பிரதீகருக்குப் புத்திரியாகப் பிறக்குதியாக, நான் வாசுதேவருக்குப் புதல்வனைச் செனிப்பேன் என்று இந்தப் பிரகாரஞ் சொல்லிவிட்டு, பாஷண்டமதமாகிய வைஷ்ணவத்தை அநுசரித்திருக்கும் இந்த வைஷ்ணவர்களைச் சர்ப்பசயனரும் உலகரக்ஷகருமாகிய தாம் அருள்நோக்கஞ்



செய்து, வைதிகநெறிக்கண்ணே நிறுத்த நினைந்து, கம்சாகரப் பெருமானிடத்திலே அருள்பெற்றுக்கொண்ட சிருங்கி வாசுதேவருடைய மனைவி வயிற்றிலே உற்பத்தியாயினர். ஐந்து கிரகங்கள் தத்தம் வீடுகளிலே உச்சத்தானத்தை அடைந்தபோது, உமாதேவியார் கந்தசுவாமியைப் பெற்றாற்போல, சிவபிரானுர் திருவடித் தாமரையை மறவாத அப்புதல்வனை அவள் பெற்றாள். அப்போது புஷ்பமழை பொழிந்தது. துந்துபிகள் ஒலித்தன. தேவரம்பையர் நடித்தனர். சிவபக்தர்களுக்கு வலத்தோளும் வலக்காலும் வலக்கண்ணும் துடித்தன. வைஷ்ணவர்களுக்கு இடப்புயங்களும் இடக்கால்களும் இடக்கண்களும் துடித்தன. இனிமையோடு தென்றல் வீசிற்று. அக்கினி களங்கமின்றிச் சொலித்தது. திக்குகளெல்லாஞ் சந்தோஷம் மலிந்தது. இங்ஙனம் புதல்வனுடைய சனனத்தைக்கேட்ட பிதாவானவர் மனமகிழ்ந்து சுருதிசாஸ்திரமறிந்தவர்களையும் வேதபாரகர்களையும் அழைத்து அவர்களுக்குக் கோதானம் பூதானம் இரண்ணியதானம் என்பவைகளைச் செய்தார். பின்னர் ஜாதகர்மஞ் செய்தார். பதினோராம்நாள் ஸ்நானஞ்செய்து பிள்ளைக்கு வாய்ப்பாக சுதர்சனர் என்னும் நாமகரணஞ் செய்தார். பாலரும்வளர்பிறைச்சந்திரன்போலமெல்லவளர்வாராயினர். தமது இரண்டுகைகளினாலும் தம்மிரண்டு பாதாங்குஷ்டங்களையும் வாயிலே வைத்துச் சுவை பார்ப்பார். பின்னர்த் தொட்டிலின்கண்ணே ஆடியும், தாயின்பாலைப் பருகியும் முதிர்வார். ஆறும்மாசத்திலே அவர் பந்து மித்திரர்கள் அவருக்கு அன்னப்பிராசனஞ்செய்தார்கள். அவருக்கு அநேக ஆபரணங்களுஞ் சூட்டினார்கள். பாலரும் தமது இனிமையாகிய வார்த்தையினாலே தந்தையாரைப் பிரீதி செய்தார். சிவபத்தர் வழியிலே போம்பொழுது அவர்கொடுத்த விபூதியை வாங்கி அப்பாலர் நெற்றியிலேயிட்டார். அதைக்கண்ட தாயார் புதல்வனுக்கு ஸ்நானஞ்செய்து தக்க தக்க தானங்களிலே ஆபரணம் அணிந்து, அரி சூர்ணத்தையும் வெள்ளைமண்ணையும் பூசினாள். அப்போது அப்புதல்வனர் வீதியிற் போந்து கஞ்சாபுரத்துப் பிராமணரும் சிவபக்தருமாகிய பசுபதி என்பாரை விபூதிருத்திராக்ஷம் பிரசாதிக்கும்படி அன்பினோடும் வேண்டி, அவற்றை அவர் கொடுக்கப்பெற்று அவ்வெள்ளைமண் மஞ்சட்பொடிகளை அழித்துவிட்டு, சர்வாங்கமும் விபூதி உத்தூளனஞ்செய்து திரிபுண்டரமாகத் தரித்து, உருத்திராக்ஷம் பூண்டு சிவாலயத்தினுள்ளே போந்து, சிவபெருமானைப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து சிவ

பிரானுக்கு உவப்பாகிய திருத்தொண்டுகளைச் செய்தார். இவற்றைச் சனங்களெல்லாம் நோக்கி முனிவர்களும் செயற்கரிய செய்கையை இப்பாலவைஷ்ணவர் செய்கின்ருரே, முன்னே மகாதேவரை நேத்திர கமலத்தினலே பூசித்த மாதவரே இப்போது சனங்களை இரக்ஷிக்கும் பொருட்டும் வைதிகமார்க்கத்தை நிறுத்தும் பொருட்டும், சிவபக்தியை வளர்க்கும்பொருட்டும் இங்ஙனம் திருவதாரஞ் செய்தனரோ என்பார். மூன்ரும் வயசிலே இவருக்குச் சௌளகருமமும், ஐந்தாம் வயதிலே உபநயனமுஞ் செய்யப்பட்டன. இது வரையும் அப்பாலர் விபூதி தாரணமுதலியன செய்தமையைப் பாலக்கிரீடை என்று நினைந்துகொண்டிருந்த பிதாவாகிய வாசுதேவர் அக்குழந்தையை அழைத்து, "குழந்தையே, நீ சிவன் கோயிலுக்கு ஒர் காலும் போகாதே, ஒர் காலும் விபூதி கொண்டு உத்தூளன திரிபுண்டரதாரணஞ் செய்யாதே, சிவபத்தரோ டிணங்காதே, அவர்களோடு பேசாதே, உருத்திராக்ஷதாரணஞ் செய்யாதே, ஸ்ரீவிஷ்ணுவின் சுத்தமாகிய பாதத்தையே சிந்தைசெய்" என்று புதல்வனுக்கு உபதேசித்தார். இப்படிச் சொல்லியும் பாலனவர் விபூதியையும் ருத்திராக்ஷத்தையும் விடாதவராய் சிவபக்தரைவணங்கி அவர் பாததூளியைச்சிரசிலேதரித்து சிவநாமங்களை உச்சரித்து, அக்கினீசுவரராலயத்தை அடைந்து, அதனைப் பன்முறையும் வலம்வந்து வணங்கி, அங்கே திருத்தொண்டு செய்து வருவாராயினர். இவ்வொழுக்கத்தைக்கண்ட பிதாவானவர் அடிக்கடி யான் புத்திபுகட்டியும் என் வார்த்தையைப் பாலன் கேட்கின்ருனில்லையே என்று அப்பாலனைக் கயிற்றினலேகட்டி, கசையினலே பின்னும் அடித்துத் தம்மதாசாரத்தை உபதேசித்தார். கட்டினின்று விடுபட்டவுடனே புறத்தேபோய்ச் சிவாலயத்தை அடைந்து, மனோவாக்குக் காயங்களினலே சிவபெருமானுக்குப் பிரீதியாகிய திருத்தொண்டுகளைச்செய்தார். பிதாவானவன் தன் மனைவியை நோக்கி "என் புதல்வன் என்வார்த்தையைக் கேட்கும் வரையும் நீ அவனுக்கு அன்னமிடாதே" என்றுசொல்லிப் போயினன். அவன்போன பின்னர்ச் சிவபக்த சிரோமணியாராகிய பாலர் விபூதிருத்திராக்ஷதாரணஞ்செய்து, சிவபெருமானைச் சேவித்துக்கொண்டு போசனஞ்செய்யுமாறு வீட்டுக்கு மீண்டுவந்து தமது தாயாரை நோக்கி "என் இனிய அன்னையே, என்னைப் பசி அதிகமாக வாட்டுகின்றது எனக்கன்னமிடுவாயாக" என்றுகேட்டுத் தன் தாயின் கையைப் பலமாகப்பற்றி பிழுத்து நெருக்கினர். அப்



போது தாயானவள் பாலனைப்பார்த்து "ஐயோ பாலா! நீ தம்முடைய வார்த்தைக்கமைந்து நடக்கும்வரையும் அன்னமிடல்வேண்டாம்" என்று உன்பிதா சொல்லிப்போயினர். ஆதலால், "நீ உன் பிதாவின் சொல்லைக்கேள். உன் பிதாவின் வார்த்தையை ஏன் கேட்கின்ருயில்லை; உன்பிதாவே உனக்கும் எனக்கும் தெய்வம். இப்போது நான் என்செய்வேன்" என்று தன்பாலனேடு அநுதாப முற்றுக் கண்ணீர் வார்ந்தாள்.

(இன்னும்வரும்.)



## வைதிகசைவர்கள் அநேகேச்சுரவாதிகளா?.

(இந்து சாதனப் பிரசுரம்.)

நமது வைதிக சைவத்தை விளக்கும் சித்தாந்த சாஸ்திர ஆராய்ச்சி யெட்டுணையுமற்ற சில புறச்சமயிகள், "சைவர்கள் பல தெய்வங்களை வழிபாடுசெய்யும் அநேகேச்சுரவாதிகள்" என்று கண்டன மெழுதித் தங்கள் வெள்ளறிவை விளக்கிக்காட்டுகின்ருர்கள். அந்தோ! இவர்கள் மதிக்கு எத்தனையொப்பிடலாம்! நமது வேதாகமாதி புராணங்கள் பிரதிபாதிக்குந் தெய்வம் ஒன்றே; அதுவே சிவம். அச்சிவத்தினை மெய்யன்போடு வழிபடுவோர்களே சைவர்கள் எனப்படுவார்கள். சிவமோ மும்மூர்த்திகளையுங் கடந்து நான்காவதாயுள்ளது. அது ஊரும் பெயரும் உருவும் கடந்ததாயினும், உயிர்கள்மாட்டுவைத்த பெருங்கருணையினல், ஊரும் பெயரும் உருவுங்கொண்டு, மனதினலே தியானித்தற்கு ஏற்ற அருள் வடிவங்கள் கொண்டருளும். அவ்வடிவங்கள், சம்புபட்சம் எனவும், அணுபட்சமெனவும் இருவகைப்படும். அவற்றுள், தமது அருட்சத்தியினிடமாகக்கொள்ளுந் தடத்த வடிவங்கள் சம்புபட்சமெனவும், மாயையினிடமாகக் கொள்ளும் வடிவங்கள் அணுபட்சமெனவுங் கூறப்படும். அவற்றுள் சத்தியினிடமாகக் கொண்ட வடிவத்தினையே வைதிக சைவர்கள் 'பதி' என்றும், 'சிவபெருமான்' என்றும் கூறுகின்ருர்கள். அச்சிவபெருமான், ஈசுவரர்களுக்கெல்லாந் தலைவராயிருப்பதினல் 'மகேஸ்வரர்' என்றும், தேவர்களுக்கெல்லாந் தேவனயிருப்பதினல் மகாதேவன் என்றும் 'தேவதேவன்' என்றும், பரமாயுள்ளவர்களுக்கெல்லாம் மேலான பரம

யிருப்பதினல் 'பராபரன்' என்றும், தாமொருவரே பதியும், ஏனையோரெல்லாம் பசுக்களாயிருத்தலினல் 'பசுபதி' என்றும் துதிக்கப்படுகிருர். இத்திருநாமங்களைப் புறச்சமயத்தவர் திருடி, "கள்ளித்தடிக்கு வெள்ளிப்பூணிட்டதுபோலவும், "சிட்டுக்குருவியின் தலையில் பனங்காயைச் சுமத்தியது" போலவுந் தங்கள் போலிக்கடவுளருக்குச் சூட்டி மகிழ்கின்ருர்கள். இன்னும் அச்சிவத்தைப்பற்றிச் "சுவேதாசுவதரம்'' முதலிய வேதங்களில், சிவத்தைத்தவிர இரண்டாவது தலைவர் யாருமில்லையென்றும், சிருட்டிக்குப் பூர்வகாலத்தில் சர்வகாரணராகிய சிவபெருமானொருவரே இருந்தாரென்றும், சமஸ்தமான தேவர்களும் பசுக்களாவார்களென்றும், அப்பசுக்களுக்குப் பதியும், சர்வத்துக்குஞ் சாட்சியாயிருப்பவரும் சிவபெருமானே என்றும், அவருக்கு உயர்வாகவேனும் ஒப்பாகவேனும் இன்னொருவரைச் சிந்தித்து வழிபடுதல் கொடிய சிவத்துரோகம் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இன்னும் எவன் அந்நிய தெய்வங்களோடு மகாதேவரைச் சமானமாக வைத்து, ஒரு வார்த்தையாவது கூறுவானே, அவனே பரம சண்டாளனென்று அழைக்கப்படுவான் என்று சைவபுராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இதுபற்றியே,

"புற்றில்வா ழரவுமஞ்சேன் பொய்யர்தம் மெய்யுமஞ்சேன்
கற்றைவார் சடையெம்மண்ணல் கண்ணுதல் பாதநண்ணி
மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே"

என்று ஸ்ரீமன், மாணிக்கவாசக சுவாமிகளும்,

மூவா முதலா முதல்வனையும் மூவுலகிற்
சாவார் பிறப்பார்க டங்களையுந்—தேவாக
ஒக்கநினைவாருக் கல்லவோ வோரேழு
மிக்க நரகம் விதித்தது காண்.

என்று சைவ 'இரட்டையரும்' கூறியருளினர்கள். இந்த நியாயங்களினல், வைதிக சைவர்கள் வணங்குந் தெய்வம் ஒன்றென்பதும், அதுவே சிவம் என்பதும் வெள்ளிடைமலைபோல் நாட்டப்பட்டமை காண்க.



வைதிக சைவர்கள் ஏகேச்சுரவாதிகளாயின் விஷ்ணுமூர்த்தியை வணங்குவது என்னை? எனின் கூறுதும்: அவ்விஷ்ணுமூர்த்தி, சிவபெருமானுக்குப் பாணமாகவும், அவர் ஏறும் இடபமாகவும், அவரைப் பூசிக்கும் அர்ச்சகனுகவும், அவருடைய பாரியாகவும் அவருடைய நிருத்தத்தில் மத்தளசேவை செய்வோனுகவும், அன்புசெலுத்தி யுய்ந்த சிவனடியாரெனவும் துதித்து, வைதிகசைவர்கள் வணங்கிவருகின்ருர்கள். இக்கருத்துப்பற்றியே "அரியலாற்றேவியில்லை யையனையாறனர்க்கே", என்று ஸ்ரீ வாகீசப்பெருந்தகையாரும், "திருமாலுக்கடிமைசெய்" என்று ஒளவைப்பிராட்டியாரும்,

"கடம்பவனச் சொக்கருக்குக் கண்ணன்றான்வேறே
இடம்பெரிய கண்ணொன்றை யீந்தான்—உடம்பதனிற்
செம்பாதி யானன் சுமக்கவெரு தானன்
அம்பானன் றேவியு மானன்" என்றும்

"காலாற் படியளக்குங் கண்ணிடந்து பூசிக்குஞ்
சேலாங் கமடமாஞ் சிங்கமாம்—பாலாகும்
ஆழியப் பிலே துயிலு மைவர்க்குந் தூதாகும்
வீழியப்ப ரேறும் விடை." என்றும்,

"பாரளக்குந் தூதுசெல்லும் பையரவின் மேனடிக்குஞ்
சீரகலி சாபத்தைத் தீர்க்குமே—யூரதனிற்
சண்டச் சகடுதைக்குந் தையலாய் கார்நீல
கண்டத் தாரூரன் கழல்"

என்றும் வைணவமதத்தை விடுத்துச் சைவ சமயத்தைக் கைக்கொண்ட காளமேகப் புலவருங் கூறியருளினர்கள். இன்னுஞ் சைவருட் சிலர், உயிர்ப்பலியேற்கின்ற துட்ட தேவதைகளாகிய காத்தவராயன், மதுரைவீரன், காடன், மாடன், காட்டேறி, சங்கிலிக் கறுப்பன், பதினெட்டாம்படிக் கறுப்பன், முனியாண்டி, பேச்சி, பிடாரி, சூளி, நாச்சிமார், அண்ணமார், நிச்சிங்கமல்லர், புறக்கடைமுனி, சடாமுனி, முதலியவைகளைவணங்கிவருவதும், முகம்மதியருடைய பள்ளிகளுக்கு நேர்த்திசெலுத்துவதும், மாதாகோயிலுக்கு காணிக்கைசெலுத்துவதும், என்னையோ? எனின், அந்தோ! அந்தோ!! இத்தகைய பதிதர்க்ளொருபோதுஞ் சைவராகமாட்டார்கள்! இவர்களுடைய சைவவேடம் கூத்தாடிகளுடைய வேடத்தை நிகர்க்கும்; இவர்கள் தங்கள் சமயவுண்மைகளை யணுத்துணையு மறியமாட்டார்கள். இவர்க

ளிடத்தில் நீவிர் எச்சமயத்தவரென ஒருவர் வினவினால், நாங்கள் தமிழ்ச்சமயத்தவரென விடையிறுப்பார்கள். இவர்களுடைய சைவ சமயப்பொலிவு விபூதி தரிப்பதின் மாத்திரமே தங்கிநிற்கின்றது. இவர்களிடத்தில் மதுபானம் மாமிசபட்சணம் முதலிய பஞ்சபாதகங்களுங் குடிகொண்டிருக்கும். மற்றைய ஆசார ஒழுக்கங்களைப் பற்றிக் கேட்கவேண்டுமா? இவர்கள் பிறருடைய குற்றங்களை ஆராய்ந்துபார்ப்பதில் இந்திரனைப்போல இருப்பார்கள். தங்களுடைய குற்றங்களைப் பார்ப்பதிலோ திருதராட்டிரன்போல விருப்பார்கள். இவர்களினும் பார்க்கத் தற்காலம் பள்ளர் பறையர் முதலியவர்களுள்ளே அநேகர் சைவாசார ஒழுக்கமும் சமயாபிமானமு முடையவர்களாகக் காணப்படுகிறார்கள். மேல்வருணத்தவருள்ளே, அந்தக்கலம் பூச்சியமாயிருத்தல் வெட்கம்! வெட்கம்!! இவர்கள் மாட்டு நமது சைவசித்தாந்த சாஸ்திரவுணர்ச்சி யில்லாமையே, இத்தீமைகளனைத்திற்குங் காரணமாகும். பைபிலைக் கல்லாதவன் கிறிஸ்தவனாவானா? கோரானை யறியாதவன் முஸ்லிம் ஆவானா? பிடகாகமத்தைப் படியாதவன் புத்தசமயத்தவனாவானா? அதுபோலச் சைவசமயத்துக்குரிய சித்தாந்த நூல்களைக் கல்லாதவனைச் சைவனென்று எப்படிக் கூறலாம்? ஐயையோ! அன்பர்களே! நமது சைவசமயிகளுள்ளே தமிழ்க்கல்வியிற் பாண்டித்திய முடையவர்கள், நூற்றுக்கு ஐந்துபேர்தானும் தெளிவது சந்தேகம். ஏனையோர் சீவியகாலம் முழுவதும் ஆங்கிலக் கல்வியையே கற்றுத் தமிழ்ப்பாஷையைச் சுத்தமாய்ப் பேசவும் முடியாமல் பறங்கித்தமிழ்பேசுகின்றார்கள். நமது தாய்ப்பாஷையாகிய தமிழையும், சமயநூல்களாகிய சித்தாந்தசாத்திரங்களையுங் கல்லாமையினலன்றோ நம்மவருள் அனேகர் புறச்சமயத்தவருடைய மாயவலையிற்சிக்கி யெரிவாய் நரகத்துக்கு ஆளாகின்றார்கள். சைவக்கோயில் மானேசர்களே! சைவவித்தியா சாலைக்கதிபர்களே! சைவப்பிரபுக்களே! குடியிருந்தவீடு கொள்ளைபோகும்போது, தூங்குமூஞ்சிகளாய்க் கிடக்கலாமா? இங்ஙனம் நாளடைவில் எல்லாரும் புறச்சமயப் படுகுழியில் வீழ்ந்துவிடுவார்களாயின் உங்கள் கோயில்களால் யாது பிரயோசனம்? வித்தியாசாலைகளால் யாதுபிரயோசனம்? சபைகளினால் யாது பிரயோசனம்? "இந்து வாலிபசங்கம்" முதலிய சங்கங்களினால் யாது பிரயோசனம்? நீங்களியற்றி வரும் குருபூசை அன்னதானம் முதலியவைகளினால் யாதுபிரயோசனம்? எல்லாங் கபாடபந்தனஞ் செய்ய வேண்டிவரு



மன்றோ? கோயில் மானேசர்களே! இந்தவிஷயத்தில் நீங்களே பெரிதுங் கவனஞ்செலுத்தவேண்டியவர்கள். தூண்டிற்காரனைப் போல எப்போதும் மிதப்பிலே கண்ணாயிருக்கலாமா? "சுவரிருந்தாலன்றோ சித்திரமெழுதலாம்?" 'வாழையடிவாழையாக' வுங்கள் பணிவிடை நடந்துவரவேண்டாமா? கண்கெட்டபின் சூரிய நமஸ்காரஞ்செய்யப் பிரயத்தனப்படாமல், தேவகோட்டை ஸ்ரீமான், மெ. அரு. நா. இராமநாதஞ்செட்டியாரவர்கள், சித்தாந்த சாத்திர வித்தியாசாலையொன்று தாபித்து நடத்திவருவதுபோல, யாழ்ப்பாணத்திலுள்ள ஒவ்வொரு பெரிய கோயில் மானேசர்களும் அப்படி வித்தியாசாலைகளைத் தாபித்து, அவைகளில் சித்தாந்தசாத்திரத்தில் பாண்டித்தியமுள்ள போதகாசிரியர்களை நியமித்துப் பலரும் ஈடேறும் வண்ணம் இலவசமாகக்கற்பியுங்கள். இன்னும் பல கலைகளினும் வல்லமேதாவியர்களைக்கொண்டு ஊர்கள்தோறும் சித்தாந்தசாரப் பிரசங்கங்கள் செய்வியுங்கள். ஈட்டிய பொருளைச் சிவ புண்ணியங்களிற் செலவுசெய்யாது தேனீபோலச் சேமித்துவைப்பிரானல், ஒளவைப் பிராட்டியார்,

> "நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
> பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—பம்புகாம்
> கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
> கள்ளர்க்காந் தீக்காகுங் காண்."

என்று கூறியவாறு தீயவழியில் செலவாகுமென்பது திண்ணம். ஆதலால் சிவத்திரவியத்தை மேற்காட்டிய உத்தமவழியிற் செலவுசெய்து வருவீர்களாயின் நமது 'வைதிக சைவம்' சுக்கில பட்சத் தம்புலிபோல் வளருவதோடு, இம்மையிலென்று மழியாத கீர்த்தியையும், மறுமையில் நித்தியானந்தமாகிய பேரின்ப வாழ்வையுமடையப் பெறுவீர்கள்.

இங்ஙனம்:

க. வைத்தியலிங்கபிள்ளை,

வண்ணைநகர்.

# சந்தாதாரர்களுக்கு விண்ணப்பம்.

ஐயன்மீர்!

நான் சுமார் முப்பது வருடங்களாகச் சைவ சமயபரிபாலன நிமித்தமாகப் பாடுபட்டுவருகிறேன். ஐரோப்பியர்கள் மாதிரியைப் பின்பற்றி சனங்கள் ஒன்றுகூடிச் சைவசமயபரிபாலனம் பண்ணுவது இன்றியமையாமையைச்சிந்தித்து சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தைத்தாபித்தேன். சமயாசாரியர்வழிகளைப்பின்பற்றிச் பல சிவதலயாத்திரைகள்செய்து எண்ணிறந்த அடியார்கள் குழுமிச்சர்வோபசாரஞ்செய்து இன்பக்கடலிற் றிளைக்குமாறு தலங்கடோறும் உழவாரத்திருப்பணி, தமிழ்வேதபாராயணம், மகேசுரபூசை, மகாபிஷேகம், உருத்திராபிஷேகம், ஆலயவழிபாடு, திருமுறைமகோற்சவம் முதலியன நடத்துவித்தேன். சென்னையில் சைவர்களுக்கெனச் சபாமண்டபம் இல்லாக்குறைவைச் சிந்தித்துச் சென்னைச்சிவனடியார் திருக்கூட்டச் சபாமண்டபத்தைக் கட்டுவித்தேன். பல அரிய நூல்களைச் சேகரித்துப் புத்தகசாலை வைத்திருக்கிறேன். சென்னையில் எண்ணிறந்த ஆங்கிலபாடசாலைகளிருந்தும் சைவசமயிகளுக்கென ஒரு ஆங்கில பாடசாலையேனும் இல்லாத மிகப்பெருங் குறையைச் சிந்தித்துச் சைவ ஆங்கிலோ வர்னகுலர் பாடசாலையைத் தாபித்தேன். சைவ சமய உண்மைகளைக் கற்றவர்களேயன்றி மற்றவர்களும் எளிதில் உணருமாறு சைவம் என்னும் இப்பத்திரிகையை வெளியிட்டு வருகிறேன். சென்னையில் எண்ணிறந்த அச்சுக்கூடங்களிருப்பினும் சைவ சமயிகளியாவருக்கும் பொதுவாக ஒரு அச்சுக்கூடமேனும் இல்லாக்குறைவைச்சிந்தித்து வைதிக சைவ அச்சுக்கூடத்தைத் தாபித்தேன். இவ்வாறு சமயபரிபாலனம்செய்யவேண்டி என் சிறந்த அரசாங்க உத்தியோகத்தை விரைவில்விட்டு நீங்கிச் சொற்ப உபகாரச் சம்பளம்பெற்றுச் சீவிப்பேனுயினேன். நான் செய்யும் எக்காரியத்திலும் எனக்கென யாதொரு சுதந்திரம் இல்லாதபடி இச்சபையை ரிஜிஸ்டர் செய்து நிர்வாக சபையின் அங்கீகாரம் பெற்றுச் செய்து வருகிறேன். இச்சபையில் எனக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை சைவர் எல்லோருக்கும் உண்டு. இவ்வாறிருந்தும், சைவ சமயிகள் பலர்நான் செய்து வருபவைகளெல்லாம் என் சொந்த காரியங்களென்றும், அவற்றில் தங்களுக்கு யாதொரு சம்பந்தமுமில்லையென்றும் நினைத்திருக்கிறார்கள். மாதசந்தாசெலுத்தும் சிலர் தங்





களை இச்சபையினராகக் கருதாமல் என்பொருட்டுப் பொருளுதவி செய்பவர்களாக எண்ணுகிறார்கள். சென்னையில்தங்களைச் சைவாபிமானிகளென்று காட்டிக்கொண்டு உபந்நியசிப்பவர்களும், அவைத்தலைமை வகிப்போரும் பலர் இருந்தும், இவர்களுட் பலர் சுயநலம் விழைதல் சாதியபிமானம் பொறாமை முதலிய துர்க்குணங்களால் கலாம் விளைத்து இச்சபைக்குத் தீங்கிழைத்தனரேயன்றி, ஒருவரேனும் உரிமைபாராட்டி உடனிருந்துசமயபரிபாலனஞ்செய்வாரில்லை. இதனால் நான் ஒருவனே எல்லாக்காரியங்களையும் என் தோள்மேற்றாங்கிச் செய்துவருவேனுயினேன். நானே போஷகன்; நானே காரியதரிசி; நானே பத்திராதிபன்; நானே அச்சுக்கூடத்தலைவன்; நானே பாடசாலை யதிபன்; நானே லிகிதன்; நானே சேவகனுமாயிருந்து எதையும் செய்யவேண்டியவனுயிருக்கிறேன். சென்னைச் சைவர்கள் நால்வர் எவரேனும் கூடி என்னுடைய சுமையைச்சிறிது குறைப்பார்களானால், நான் இறப்பதற்குள் உயர்தரப் பாடசாலை முதலியவைகளைத்தாபிக்கலாம். சம்பளங் கொடுத்துச் சிப்பந்திகளைவைத்து இவைகள் நிரந்தரமாய் நடைபெறுமாறு செய்யலாம் என்று பார்த்தாலோ, பொருளுதவிசெய்யும் சைவப்பிரபுக்களும் கிடைக்கவில்லை. பத்திரிகையின் வருமானத்தைக்கொண்டு சிப்பந்திகளைவைத்துப்பத்திரிகையைநடத்தலாகாதோவெனின், சென்ற வருடமுடிவில் 900-சந்தாதாரர்களே இருந்தார்கள். இவர்களுள் 200-பேர் ஆயுள் சந்தாதாரர்கள். எஞ்சியபேர் எழுநூற்றுவர். இவர்களுள் 250-பேர் சென்ற ஜனவரிமீ பத்திரிகையைத்திருப்பிவிட்டார்கள். இப்பத்திரிகை வெளியிடத்தொடங்கியபோது காகிதத்தின் விலை ரீம் ஒன்றுக்கு 2-ரூபாவாயிருந்தது. இப்போது 8-ரூபாவாயிருக்கிறது. நான் அச்சிடும் 1500 பிரதிகளுக்குச்சுமார் 550-ரூபாவுக்கு காகிதம் வாங்கவேண்டும். அச்சுக்கூலி 250 ரூபா, தபால் செலவு 300-ரூபா, லிகிதர் சம்பளம் 250-ரூபா, சில்லரை செலவு 50 ரூபா ஆகமொத்தம் 1400 ரூபாகிடைத்தால் இப்பத்திரிகையை ஒரு லிகிதர் ஒத்தாசைகொண்டு நான் பத்திராசிரியனுயிருந்துநடத்தலாம். இப்போது இப்பத்திரிகையின்பொருட்டு அதிகமாய்ச்செலவாவதையும், முதலில் 16-பக்கங்களாக வெளிவந்தது இப்போது 24-பக்கங்களாகவெளிவருவதையும், இப்பத்திரிகையினுலுண்டாகும் பலனையும் விரித்தெழுதிக் கடிதம் அச்சிட்டு, முன்னே 10 ரூபாகொடுத்த ஆயுள்சந்தாதாரர்களுக்கு அனுப்பி, அன்புகூர்ந்து மறுபடியும் 5 ரூபா கொடுக்கும்படிபிரார்த்தித்துச் சென்ற

ஜனவரிமாதப் பத்திரிகையை இவர்களுக்கு ஐந்து ரூபாவுக்கு வி. பி. யில் அனுப்பினேன். இவர்களுள் 50-பேர்களே 5 ரூபா வீதம் கொடுத்து வி. பி. யைப் பெற்றுக்கொண்டார்கள். மற்றவர்கள் திருப்பிவிட்டார்கள். இக்காரணங்களால் இப்பத்திரிகையை இதின் சந்தாவையேகொண்டு நடத்துவது பிரயாசையாயிருக்கிறது. ஆதலால் பத்திரிகையின் வருமானத்தைக்கொண்டு சிப்பந்திகளை வைத்து நடத்த இயலாமல் எல்லாவேலைகளையும் மிகவும் கஷ்டப்பட்டு நானே செய்யவேண்டியவனு யிருக்கிறேன். சனங்களுக்கு மிகவும் உபயோகமாகும் பல விஷயங்களை எழுத எனக்கு நேரமில்லை. ஒருதினமேனும் எனக்கு விடுமுறையில்லை. இதனுல் என் சரீரம் மிகவும் வாடிவிட்டது. இவ்வருடாரம்பத்தில் நோயினும் வீழ்ந்தேன். அதனுல் பத்திரிகையை முன்போல் தாமதமின்றி நடத்த இயலவில்லை. வைத்தியர்கள் நான் இளைப்பாறியிருத்தல் அத்தியாவசியம் என்றும், இல்லாவிட்டால் மிகவும் கெடுதிவிளையும் என்றும் சொல்லுகிருர்கள். நான் அதையும் பொருட்படுத்தாமல் கொண்ட நல்விரதத்தால் இளைக்கும் யாக்கையை விரும்புகின்றவனுயினும், நான் தொடங்கிய காரியங்களுக்கு முட்டுவராமற் பாதுகாத்தற்கு என் சரீரசுகத்தைப் பாதுகாக்க வேண்டியவனுகவுமிருக்கின்றேன். அது பற்றியும், சென்ற இரண்டு மாதங்களாக நான் வியாச்சிய விஷயமாக அயலூருக்கு நான்குமுறை போய்வந்ததனுலும், சிவராத்திரிக்குச் திருக்காளத்திக்குப் போய் தேவகோட்டை. ஸ்ரீமான்-மெ. அரு. நா. இராமநாதன்செட்டியார் அவர்களைக் கண்டு அவர்கள் சென்னைக்கு வருவதை எதிர்நோக்கியிருந்து அவர்களுக்கு நான் செய்துவரும் வேலைகளைக்காட்டிச் சந்தோஷிப்பித்து, ஆங்கில உயர்தரப்பாடசாலைகள் வைத்து அவற்றின் மூலமாகச் சிறுவர்களுக்குச் சமயபோதனையும் சிவதீக்கை முதலியனவும் செய்வித்தாலன்றி இனிச் சைவசமயம் சீவிப்பதரிதென்பதை விளக்கிக்காட்டினமையாலும், ஜனவரிமாதத்தில் மெஷின் வாங்கி அச்சுக்கூடத்தை அபிவிருத்தி செய்தமையாலும், சென்ற பிப்ரவரிமாதப் பத்திரிகையைத் தாமதித்து வெளியிடநேரிட்டதோடு, மார்ச்சுமாதப் பத்திரிகையையே ஏப்ரல்மாதப் பத்திரிகையாகவும் வெளியிட நேரிட்டது. அன்றியும் பல கடிதங்களுக்குப் பதில் அனுப்பவும் மிகவும் தாமதமாயிற்று. இவைகளை அன்பர்கள் பொறுத்தருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்:

இ. ஆதிமூலமுதலியார்.

பத்திரிகாசிரியன்.

